4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 10] மதுரை 7-10-72 சனி [மலர் 236

## இந்தோ—சீனவில் அமெரிக்காவின் குண்டுமழை!

வாஷிங்டன், அக். 6—

வியட்நாம், லாவோஸ், கம்போடியா ஆகிய இந்தோ—சீன நாடுகள் மீது, ஆக்கிரமிப்பு வெறி கொண்ட அமெரிக்க விமானங்கள் கடந்த ஏழரை ஆண்டுகளில் மட்டும் 75 லட்சம் டன் குண்டுகளைப் பொழிந்துள்ளன. இது, 2-வது உலகப்போரில் நேச நாடுகள் வீசிய குண்டுகளின் எடையைவிட 3 மடங்குகள் அதிகம! இத்தகவலை அமெரிக்கப் பாதுகாப்பு இலாகா கூறியுள்ளது.

கடந்த எட்டரை மாதங்களில் மட்டும் 8 லட்சம் டன் குண்டுகளை அமெரிக்கா வீசியது! இது, கடந்த ஆண்டைக் காட்டிலும் அதிகம்.

## 6 லட்சம் கயிறு தொழிலாளர் வேலைநிறுத்தம்

திருவனந்தபுரம், அக். 6—

கேரளத்தில் நேற்று, சி. ஐ. டி. யூ. சங்கத்தைச் சேர்ந்த 6 லட்சம் கயிறு தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்; அரசு அலுவலங்கள் முன் மறியலும் செய்தனர்.

சம்பள உயர்வு வேண்டும்—இயந்திரமயமாக்குதல் கூடாது—ஏற்றுமதியை அரசு ஏற்கவேண்டும் முதலிய கோரிக்கைகளுக்காக இந்தப் போராட்டம் நடைபெற்றது.




## பஞ்சாப் மாணவர்கள் மீது துப்பாக்கிச் சூடு நால்வர் படுகொலை

## 27 பேர் உயிர் ஊசலாடுகிறது

சண்டிகர், அக். 6 –

அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்த பஞ்சாப் மாணவர்கள் மீது மோகா என்னுமிடத்தில் போலீஸ் கண்மூடித் தனமாக துப்பாக்கிப் பிரயோகம் செய்தது. இதில் நான்கு மாணவர்கள் இறந்தனர். 27 மாணவர்கள் படுகாயம் அடைந்தனர்

தங்களுடைய கல்லூரியில் கூட்டமொன்று நடத்திய பின் அருகாமையிலுள்ள சினிமா அரங்கம் ஒன்றிற்கு மோகா கல்லூரி மாணவர்கள் ஊர்வலமாகச் சென்றனர். தங்களுக்கு வழக்கமாக தரப்படும் சலுகைகள் வழங்கப்பட வேண்டும் என்று கோருவதற்காகவே இந்த ஊர்வலம் நடைபெற்றது.

விலைவாசிகள் உயர்ந்து அதனல் வருவாயும் சுருங்கிவிட்ட இன்றைய சூழ்நிலையிலே, மாணவர்கள் இத்தகைய சலுகைகள் கோரியதை அதிகாரிகள் அனுதாபத்துடன் கவனித்தார்களா? இல்லை.

சட்டம் ஒழுங்குப் பிரச்சனையாகவே இதைப் பார்த்தனர். வாழ்க்கையின்முதல் படியில் அடி எடுத்து வைக்கும் இந்த இளைஞர்களது நியாயமான கோரிக்கை முழக்கத்தை துப்பாக்கிச் சனியன்மூலம் சந்தித்தனர். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்ட எதையும்செய்யலாம் என்ற காங்கிரஸ் ஆட்சியின் பொது விதியை போலீஸ் அதிகாரிகள் அமுல் நடத்தினர். நான்கு இளைஞர்களை படுகொலை செய்தனர். 27 பேரைப் படு காயப்படுத்தினர்.

இந்திராகாந்தியின் கரீபீ ஹட்டோ இவ்வாறுபஞ்சாப் மாநிலத்தில் அமுல் நடத்தப்படுகிறது.

## வலது கம்யூனிஸ்டு ஆர்ப்பாட்டத்தில் துப்பாக்கி சூடு ஒருவர் சாவு

பாட்னு, அக். 6—

பீகார் மாநிலம் அவுரங்கபாத்தில், சப்-டிவிசனல் அதிகாரி கோர்ட்டுக்குமுன்னல் நேற்று விலைவாசியை குறைக்கக்கோரி ஆர்ப்பாட்டம் நடத்திய வலது கம்யூனிஸ்டுகள் மீது போலீஸ் துப்பாக்கிச்சூடு நடத்தியது. இதில், ராம் தேனிமாதே என்பவர் கொல்லப்பட்டார்.

## பஞ்சம், பட்டினிச் சாவுகள் நிகழ்ந்திடும் பீகார் மாநிலம்

## பிரதமர் வந்தபின் நிலைமை என்ன?

(நமது சிறப்புச் செய்தியாளர்)

பாட்னு, அக். 6—

மக்களின் நியாயமான போராட்டங்களை இரும்புக்கரம் கொண்டு அடக்கிய பீகார் முதலமைச்சர் கேதார் பாண்டேக்கு "நற்சான்றிதழ்" வழங்கியுள்ளார் பிரதமர் இந்திரா காந்தி. வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளைப் பார்வையிடுவதற்கே பிரதமர் இந்திராகாந்தி பீகார் வந்தார். பிரதமர் விஜயத்தால் மக்களுக்கு ஏதாவது உதவி கிடைத்ததா? இல்லை.

உதாரணமாக, ஹசாரி மாவட்டம் வறட்சியால் கடுமையாக பாதிக்கப்பட்டது. உதவிக் கமிஷனர் தக்க நடவடிக்கைகள் எடுக்கக் கோரியும் தலைநகரிலுள்ள மந்திரிகள் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

நியாய விலைக் கடைகளில் உணவு தானியங்கள் இல்லாமல் வெறிச்சோடிக் கிடக்கின்றன.

ஜுலை மாதத்தில் அரசால் நியாய விலைக் கடைகளுக்கு ஒதுக்கப்பட்ட கோதுமையின் அளவு 20,300 டன்கள், அரிசி 1130 டன்கள், சோளம் 300 டன்களாகும்.

ஒதுக்கப்பட்ட அளவு கோதுமை கொடுக்கப்பட்டதா? கிடையாது.

வாக்குறுதிக்கு மாருக 1164 டன் கோதுமையே ரசீதில் காணப்படுகிறது. ஆனல் அரிசியும், சோளமும் எள்ளளவும் அளிக்கப்படவில்லை.

### ராக்கெட் வேகம் பாரீர்!

விலைவாசிகளோ விஷம் போல ஏறிக் கொண்டிருக்கின்றன. கடந்த செப்டம்பர் மாதத்தில் நயமில்லாத மோட்டா ரக அரிசி ஒரு குவிண்டால் ரூ. 127-க்கு விற்கப்பட்டது. அதே ரக அரிசி தற்பொழுது குவிண்டால் ரூ. 150-க்கு விற்கப்படுகிறது. நடுத்தர அரிசி ரூ. 145-லிருந்து ரூ. 165 ஆகவும், கோதுமை ரூ. 104-லிலிருந்து ரூ. 120 ஆகவும், பருப்பு ரூ. 110 லிருந்து ரூ. 130 ஆகவும், சோளம் ரூ. 88-லிருந்து ரூ 101 ஆகவும், சர்க்கரை ரூ. 207 லிருந்து ரூ. 312 ஆகவும் உயர்ந்துள்ளன.

இந்தப் பகுதியிலுள்ள 30 லட்சம் மக்களில், 25 லட்சம் மக்கள் கடுமையாக வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளனர். 10 ஆயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் வேலையில்லாமல் அவதியுறுகின்றனர்.

### எதிர்கட்சிகளின் வற்புறுத்தல்

பீகாரை பஞ்சப்பிரதேசமாக அறிவிக்க வேண்டும், விலைவாசிகளை கட்டுப்படுத்தவும், வேலை வாய்ப்பு அளிக்கவும் நிவாரண வேலைகளை மேற்கொள்ள வேண்டுமென மார்க்சிஸ்ட் கட்சி உள்பட அனைத்து எதிர்க்கட்சிகளும் அரசை வற்புறுத்தின.

இந்தக் கோரிக்கைகளுக்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பல போராட்டங்களை நடத்தி வருகிறது.

### தடையை மீறி ஊர்வலம்

சம்பரான் மாவட்டத்தில் பஞ்சத்தால் இறந்த 50 பேர்கள் பட்டினியால் மரணமடைந்தனர்.

இதை எதிர்த்து கடந்த வாரம் மோதி கரி பகுதியில் 144 தடை உத்தரவையும் மீறி 2500க்கும் மேற்பட்ட விவசாயத் தொழிலாளர்கள், விவசாயிகள், மாபெரும் ஊர்வலம் நடத்தினர்.

கிராமப் புறங்களிலுள்ள ஏழை மக்களும் போராட்டம் நடத்துகின்றனர். இக்கிராமப்புற மக்களை ஒருங்கிணைத்து போராட்டம் நடத்துவதில் சோஷலிஸ்ட் கட்சி முக்கிய பங்குவகித்து வருகிறது.

செப். 18ல் மாபெரும பேரணியும் நடத்தப்பட்டது. இதில் மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சி, சோசலிஸ்ட் கட்சி, எஸ் யூ சி, ஆர் எஸ் பி ஆகிய கட்சிகள் பங்கு கொண்டன. வலதுசாரி கம்யூனிஸ்ட் கட்சியால் தனியாக ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது.

### நடவடிக்கை இல்லை

மக்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்க பீகார் அரசு மறுத்து வருகிறது. பஞ்சத்தால் எவரும் சாகவில்லை என பீகார் முதலமைச்சர் அறிவித்துளளார்.

கள்ள மார்க்கெட்காரர்கள் மீதும், கறுப்புப் பண திமிங்கலங்கள் மீதும அரசு எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை; குழப்பம் விளைவிக்கும் அரசு அதிகாரிகள்மீது அரசு நடவடிக்கை எடுக்கத் தயாராக இல்லை. எதிர்கட்சிகள் எவ்வளவோ சான்றுகளை அளித்தும் நடவடிக்கை எடுக்கவில்லை.

### ஆசிரியர் - மாணவர் போராட்டம்

ஆசிரியர்—மாணவர்களின் நியாயமிக்க கோரிக்கைகளை ஏற்காததால் நகர்ப்புறங்களிலுள்ள ஆசிரியர்களும், மாணவர்களும், அரசு ஊழியர்களும் பல்லாயிரக் கணக்கானேர் போராட்டங்களில் இறங்கி விட்டனர்.

போராடும் மாணவர்கள் மீது தடியடியும், குண்டு வீச்சும் சர்வ சாதரணமாக நடைபெறுகின்றன.

(4-ம் பக்கம் பார்க்க)

## ரூர்கேலா உருக்காலை தொழிலாளர் வேலைநீக்கம்: ஒரிசாவில் மாபெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம்

டென்சா, (ஒரிசா) அக். 5—

ரூர்கேலா உருக்க ஆலையைச்சேர்ந்த பர்சுவா இரும்புக் கனிச் சுரங்கத்தின் சி ஐ டி யூ சங்கப் பொதுக் காரியதரிசி உட்பட 16 தொழிலாளர்களை நிர்வாகம் வேலை நீக்கம் செய்தது. இதையொட்டி, செப். 24-ல் டென்சாவில் தொழிற்சங்க சிறப்பு மாநாடு நடைபெற்றது.

கல்கத்தா, துர்க்காபூர், ரூர்கேலா, ஜாஸ்பூர், பர்பில், கிரிபுரு மற்றும் பல இடங்களிலிருந்து 25 தொழிற்சங்கங்களின் சார்பில் 97 பிரதிநிதிகள் கலந்துகொண்டனர்.

அன்று காலை சிறப்பு மாநாடு துவங்கியது. தலைமைக் குழுவுக்கு ஐவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒரிசா மாநிலச் செயலாளர் தோழர் சிவாஜி பட்நாயக் சிறப்பு மாநாட்டைத் துவக்கிவைத்தார். தோழர் ஜீவன்ராய் (துர்க்காபூர்) விளக்கவுரை நிகழ்த்தினர். பின்னர் பிரதிநிதிகளின் விவாதம் ஆரம்பமானது. இதில் 25 பேர் கலந்துகொண்டனர். முடிவில் தோழர் ஏ வி சபாபதி, விவாதத்திற்கு பதிலுரை வழங்கினர். பின்னர் பல தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன.

### ஆர்ப்பாட்ட ஊர்வலம்

அன்று மாலை, பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது. இதில், ஏராளமான பெண்கள் உள்பட 2,000 தொழிலாளர்கள் கலந்துகொண்டனர். ஏராளமான பெண்கள் கலந்துகொண்டது, ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

'பர்சுவா' இரும்புக் கனிச் சுரங்கத் தொழிலாளர்கள் வேலைநீக்கம செய்யப்பட்டதை எதிர்த்துக் கண்டன முழக்கம் எழுப்பினர்.

### பொதுக்கூட்டம்

ஊர்வலம்பொதுக்கூட்டத் திடலை அடைந்த பின்னர் அங்கு பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் சிவாஜி பட்நாயக் தலைமை வகித்தார். தோழர்கள் ஜீவன்ராய், எஸ் என் முதலி, லட்சுமிதர்பிஸ்வாஸ், அஜரஸ்கான் (கிபுரு - ஏ ஐ டி யூ.சி.) எஸ் கே சீல் முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

தோழர் ஜீவன்ராய் (சி ஐ டி யூ) பேசுகையில். 16 தொழிலாளர்களை நிர்வாகம் டிஸ்மிஸ் செய்தது அநியாயம் என்றும், திரும்ப அவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ள காலம் தாழ்த்தினல் அனைத்து உருக்காலை, கனிச்சுரங்க தொழிலாளர்களும் போராட்டத்தில் குதிக்க நேரிடும் என்றும் எச்சரிக்கை செய்தார்

## பெரு முதலாளிகள் வரி பாக்கி ரூ. 1,000 கோடி

## அதில் முந்திரா பாக்கி ரூ. 5கோடி

பெரு முதலாளிகளிடமிருந்து வசூலிக்கப்பட வேண்டிய வரி பாக்கி மட்டும்

**1971-ம் ஆண்டு கணக்குப்படி ரூ 850 கோடி**
**1972-ல் அது ரூ 1000 கோடியைத் தாண்டியிருக்கும்.**

இதில் முந்திரா முதலாளியும், அவரது கம்பெனிகளும் தராமலிருக்கும் வரி பாக்கி மட்டும் ரூ 5 கோடி.

தகவல்: மத்திய நிதியமைச்சகம், 5—5—72.

### முதலாளிகளுக்கு கோடி கோடியாய் வரி ரத்து

1969-70-ம் ஆண்டில் ரூபாய் இரண்டரைக் கோடி வருமான வரி ரத்து செய்யப்பட்டது.

1970-71-ம் ஆண்டில் ரூ 5 கோடி ரத்து செய்யப்பட்டது.

தகவல்: அமைச்சர் கே. ஆர். கணேஷ்
1—3—72-ல் லோக் சபைக் கூட்டத்தில்,

இவர்களெல்லாம் ஏழைகளா? ஏன் வசூலிக்கக்கூடாது?
வசூலித்தால், அன்ருடத் தேவைப் பண்டங்கள் மீது
வரி போடவேண்டிய அவசியம் ஏற்படுமா?

## வங்க மக்கள் பேரணி அமைதியாகவே நடந்தது

### 'ரே'யே ஒப்புக்கொள்கிறர்

கல்கத்தா, அக். 6—

மேற்கு வங்கத்தில் மீண்டும் பலாத்காரத்தைத் தூண்டிவிடவே, அக். 4-ம் நாள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையில் உள்ள 8 கட்சிகள் முன்னணி பேரணி நடத்துகிறது என்று மேற்கு வங்க முதலமைச்சர் சித்தார்த்தசங்கர் ரே பூச்சாண்டி காட்டினர். அந்த 'பலாத்காரத்தையும் சந்திக்கப் போவதாகவும் முறியடிக்கப் போவதாகவும் அவர் மிரட்டினர்.

ஆனல் சித்தார்த்தசங்கர் ரே, அக் 4ம் நாள் நடந்த பேரணிமிகவும்அமைதியாக நடந்தது என்றும், எந்த அசம்பாவிதமும் நடக்கவில்லை என்றும் செய்தியாளர்களிடையே கூறினர்.

அணிவகுப்பில் கலந்து கொள்ள வந்து கொண்டிருந்த 50 ஆயிரத்துக்குமேற்பட்டவர்கள் ரயில்வே நிலையத்திலும் மற்றைய இடங்களிலும் கைது செய்யப்பட்டு போலீஸ் காவலில் வைக்கப் பட்டுள்ளதாக தோழர் ஜோதிபாசு குற்றஞ்சாட்டினர் அல்லவா?

இப்படி அடக்குமுறை வழிகளை அரசு பின்பற்றிய போதிலும், பல லட்சக் கணக்கானேர் கலந்து கொண்ட மாபெரும் பேரணியும், கவர்னர் டயஸ் முன்னல் ஆர்ப்பாட்டமும் சிறப்பாகவும் அமைதியாகவும் நடந்தேறியது.

ஜோதிபாசுவின் குற்றச் சாட்டுக்குப் பதில் கூறும்

(4-ம் பத்தி பார்க்க)

(8ம் பத்தி தொடர்ச்சி)

வகையில் சில உண்மைகளை செய்தியாளர்களிடையேசித்தார்த்தசங்கர்ரே ஒப்புக்கொண்டார்.

போலீசாரால் கைது செய்யப்பட்டவர்கள் 3ஆயிரம பேர்தான் என்றும், 16 ஆயிரம் பேர் பேரணிக்கு வராமல் "திரும்பி சென்று" விட்டார்கள் என்றும் கூறினர்.

மார்க்சிஸ்ட் கட்சி தலைமையில் நடக்கும் பேரணியை முறியடிக்க, எவ்வளவு கொடுமையான அடக்கு முறைகளை மேற்கு வங்க காங்கிரஸ் அரசு பின்பற்றியுள்ளது எனபதற்கு சித்தார்த்த சங்கர்ரே கூறியுள்ள விவரங்களே போதிய சான்றுகளாகும்.

# அக். 9, 10 தேதிகளில் அரசு அலுவலகங்கள் முன் ஆர்ப்பாட்டம்

தீக்கதிர்

## இன்னும் 'கெடுபிடி' ஏன்?

இந்தியா பாகிஸ்தான் யுத்தம் முடிந்து 8 மாதங்களுக்குமேல் ஓடிவிட்டன.

அதன் பிறகு இந்தியப் பிரதமரும் பாகிஸ்தான் ஜனாதிபதியும் சிம்லாவில் சந்தித்துப் பேசி உடன்பாடு கண்டனர். 'சிம்லா நல்லுணர்வு' இனி இரு நாடுகளிடையே நட்புறவை வளர்க்கும் என்று உலகெங்கும் பேசப்படுகிறது.

நேருக்கு நேர் சம்பந்தப்பட்ட இரு நாடுகளும் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ளுவதுதான் சரியான வழி; மூன்றாவது நபரின் தலையீட்டிற்கு இரு நாடுகளும் இனி இடம் கொடுக்கக்கூடாது என்ற முடிவும் செய்யப்பட்டது.

இரு நாடுகளும் சர்வதேசிய எல்லைக் கோட்டை நிர்ணயித்துக் கொள்வதில் பல சிக்கல்களை எதிர்நோக்கிய போதிலும், சிம்லா உடன்பாட்டின் வழியிலிருந்து மீறிச் செல்லமாட்டோம் என்று இரு நாடுகளின் தலைவர்கள் அடிக்கடி பிரகடனம் செய்கின்றனர்.

பங்களா தேஷ் விடுதலைக்குப்பின், பாகிஸ்தான் ராணுவ வெறியர்கள் படுதோல்விகண்ட பின்— இந்தியா மீது இன்றைய நிலையில் அவர்கள் மீண்டும் படையெடுக்க முடியும் என்று யாரும் இங்கு கூறவில்லை.

அதேபோல் இந்த நாட்டில் கெடுபிடி நிலையை நீடிப்பதற்கு அடிக்கடி கூறப்படுவது 'சீனப் படையெடுப்பு அபாயம்' என்ற காங்கிரசாரின் பழையபல்லவி. இதற்குப்பதில் எப்படியாவது சீனத்துடன் நல்லுறவு கொள்ளவேண்டுமென்ற உணர்வே இன்று நிலவுகிறது. சீனப் படையெடுப்பு அபாயம் பற்றிப் பேசுவது அரசியல் அறிவிலித்தனம், திசை திருப்பும் சாகசம் என்பதை பெரும்பாலான மக்கள் ஒப்புக்கொள்ளும் சூழ்நிலை இது.

நிலைமை இவ்வாறு இருக்க, யுத்தம் முடிந்து 8 மாதங்களுக்குமேல் ஆகியும் யுத்தக் கெடுபிடி நிலைமை பிரகடனத்தை நீடிப்பது ஏன்? யுத்த காலத்தில் மக்கள் மீது விதிக்கப்பட்ட வரிகளை நீடிப்பது ஏன்?

இன்று விலைவாசி உயர்வால், வேலையில்லாத் திண்டாட்ட அதிகரிப்பால் பயங்கரமாகப் பாதிக்கப்பட்டுள்ள மக்கள் பெரும் கிளர்ச்சிகளில் ஈடுபட்டுள்ளனர். காங்கிரஸ் ஆட்சியாளர்களின் பிற்போக்கு கொள்கைகளை மாற்றும்படி போராடுகிறார்கள்.

இந்த நியாயமான போராட்டங்களை ஒடுக்க கெடுபிடி நிலைமையும், பாதுகாப்பு சட்டமும் அவசியம் தேவை என்று மத்திய ஆட்சியாளர்கள் கருதுகிறார்களா?

இதுவரை பாதுகாப்புச் சட்டத்தை மத்திய ஆட்சியும் சரி, தி. மு. க. அரசு உள்ளிட்டு மாநில அரசுகளும் சரி, நீதிகோரிப் போராடும் தொழிலாளர்களுக்கு எதிராகத்தானே பயன்படுத்தின?

சமீபத்தில் நடந்து முடிந்த தென் ரயில்வே ஊழியர்களது நியாயமான போராட்டத்தை அடக்க பயன்படுத்தப்படவில்லையா? இது மிக அண்மையில் நிகழ்ந்த நிகழ்ச்சி.

இந்திரா ஆட்சியைக் கேட்கிறோம் இன்னும் எத்தனை நாளைக்கு கெடுபிடி நிலைமை அவசியம் என்ற சாகசத்தை தொடரப் போகிறீர்கள்? இதனால் மக்களது போராட்டங்கள் வெடிப்பதை உங்களால் தடுத்துவிட முடியுமா?

## சூதாடிகளுக்கு துணை நிற்போர்

இந்திரா காங்கிரசின் அகில இந்தியக் காரியக் கமிட்டி உணவுக் கொள்முதல் விநியோகம் பற்றி ஏதோ "தீவிரமான" முடிவு எடுப்பது போல் முதலில் பிரச்சாரம் செய்யப்பட்டது. ஆனால் அக். 4ம் நாள் அது எடுத்த முடிவு? அரிசி, கோதுமை ஆகிய இரு தான்யங்களின் மொத்த வியாபாரத்தை மட்டுமே அரசாங்கம் மேற்கொள்வதென்றும், அதையும் அடுத்த ஆண்டு (1973) ஏப்ரல் மாதத்திலிருந்துதான் அமுல் நடத்துவதென்றும் முடிவு செய்துள்ளது.

உணவு வியாபாரிகள் இன்று நடத்திவரும் சூதாட்டத்திற்கும், இந்திரா காங்கிரஸ் கட்சிக்கும் பல்வேறுமட்டங்களில் நெருக்கமான உறவு உண்டு என்பது உலகறிந்த ரகசியம்.

சர்க்கரை ஆலை முதலாளிகள் காங்கிரஸ் கட்சிக்கு கோடிக்கணக்கில் தேர்தல் நிதி அளித்தது ஊரறிந்த ரகசியம். இதேபோல் ஏனைய கருப்புப்பணக் கள்ள வியாபாரிகள் காங்கிரஸ் கட்சிக்கு "தீனி" போட்டு பாதுகாத்து வருவதையும் அனைவரும் அறிவர்.

இத்தகைய உணவுச் சூதாட்டக்காரர்களின் உள்ளம் குளிரும் வகையில், காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் இயற்றியுள்ளதில் ஆச்சர்யமில்லை.

ரோமாபுரி பற்றி எரியும்போது, நீரோ மன்னன் பிடில் வாசித்துக்கொண்டிருந்தானாம். அந்தக் கெடுமதியாளன் சென்ற வழியையே இன்று காங்கிரஸ் ஆட்சியாளரும் பின்பற்றுகின்றனர்.

இந்த ஆண்டு குறுவை அறுவடையைக் கொள்முதல் செய்யும் திட்டம் கைவிடப்படுவதின் மூலம், உடனடியாக நியாய விலைக் கடைகளோ வறட்சிப் பகுதிகளில் மலிவு தானியக் கடைகளோ திறக்கப்பட போவதில்லை என்பது தெளிவாகிறது.

இதற்குமேல், இனி காங்கிரஸ் ஆட்சியாளரின் இப்போக்கிற்கு தக்க பதில் கூறவேண்டியது, பாதிக்கப்படும் மக்களது பேரெழுச்சி ஒன்றுதான்.

## அமரர் சீனிவாசராவ் நினைவு விழா



திருவாரூர், அக். 4— தஞ்சை மாவட்டத்தில் அமரர் பி. சீனிவாசராவின் நினைவு நாள் செப். 30-ம் தேதி வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

தமிழகத்தில், குறிப்பாக தஞ்சை மாவட்டத்தில் நிலப்பிரபுத்துவ சுரண்டலை ஒழிக்க பாடுபடும் ஏழை விவசாயிகளைத் தட்டி எழுப்பி அவர்களை ஸ்தாபன ரீதியில் அணிதிரளச் செய்வதில் முன்னணியில் நின்றவர் தோழர் பி. சீனிவாசராவ். தமிழகத்தில் கம்யூனிச இயக்கத்தைக் கட்டுவதில் முன்னணியில் நின்றவர் அவர்.

அமரர் சீனிவாசராவின் நினைவு நாளான செப். 30-ம் தேதியன்று தஞ்சை மாவட்டம் முழுவதும் செங்கொடிகள் ஏற்றி வேலை நிறுத்தம் செய்து ஊர்வலங்கள் நடத்தினர்.

தோழர் சீனிவாசராவ் முதன் முறையாக விவசாய சங்கத்தைத் துவக்கிய தென்பரையில் நினைவுநாள் வெகு சிறப்பாக நடைபெற்றது.

திருத்துறைப்பூண்டி தாலுகாவிலுள்ள அம்மனூரில் அமரர் பி. சீனிவாசராவின் நினைவு மன்றக்கட்டிடம் திறந்துவைக்கப்பட்டது.

### அழிக்கோடன் வீட்டைச் சோதனையிட்ட

## அதே போலீஸ் அதிகாரிகளே என்னையும் கடத்திச் சென்றனர்

### "நவாப்" பத்திரிகை ஆசிரியர் சாட்சியம்

திருச்சூர், அக். 3—

கேரள உள்துறை அமைச்சரின் தனி உதவியாளர் எழுதிய கடிதத்தின் அசலை 'நவாப்' ஆசிரியர் ராஜேந்திரனிடமிருந்து பிடுங்கிக் கொண்டுபோய் விட்டார்கள்.

விவசாயக் கல்லூரி கட்ட தட்டில் எஸ்டேட் முதலாளியிடமிருந்து நிலம் ஆர்ஜிதம் செய்ததாகவும், அதற்காக கூடுதல் தொகை முதலாளிக்கு கேரள அரசு கொடுத்ததாகவும்- அதையடுத்து, கேரள உள்துறை அமைச்சரின் உதவியாளர் அந்த தட்டில் தோட்ட முதலாளிக்கு ஒரு கடிதம் எழுதியதாகவும்- அக்கடிதத்தில் திருச்சூர் மாவட்ட இண்டிகேட் காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 15,000 கொடுக்குமாறு கேட்டிருந்ததாகவும்-அந்தக் கடிதத்தைப் போட்டோ எடுத்து, நவாப் பத்திரிகையில் பிரசுரித்துவிட்டதையும்-இது விஷயம் கேரளம் முழுவதும் பரபரப்பை ஏற்படுத்தியதும், அதனால் மந்திரி கருணாகரனுக்கு ஆத்திரம் ஏற்பட்டதையும் அவரது போலீஸ்படையினர் நவாப் ஆசிரியரிடமிருந்து அக் கடிதத்தைக் கைப்பற்ற பல்வேறு முயற்சிகள் செய்ததையும் நேயர்கள் அறிவார்கள்.

ஏற்கனவே தம்மை கடத்திக் கொண்டுபோனதாக, நவாப் பத்திரிகை ஆசிரியர் வக்கீல் மூலம் கோர்ட்டில் மனுக்கொடுத்திருக்கிறார் என்பது தெரிந்ததே.

போலீஸ் மந்திரி கருணாகரனின் தனி உதவியாளர் திருச்சூரிலுள்ள தட்டில் தோட்ட முதலாளிக்கு எழுதிய கடிதத்தின் போட்டோ காப்பியை நவாப் பத்திரிக்கையில் வெளியிட்டது சம்பந்தமாக அவர் மீது போடப்பட்ட வழக்கு, 30-9-72-ல் விசாரணைக்கு வந்தது.

அதற்கு முதல் நாள் யாரோ சிலர், நவாப் பத்திரிகை ஆசிரியர் ராஜேந்திரனைக் கடத்திக்கொண்டு போய் விட்டார்கள். அதனால், செப்டம்பர் 30-ம் தேதி அவர் கோர்ட்டில் ஆஜராக முடியவில்லை என்பதை அவரது வக்கீல்மூலம் ஏற்கனவே கோர்ட்டுக்கு தெரிவிக்கப்பட்டுள்ளது.

### கடத்திச்சென்று துன்புறுத்தல்

ஏற்கெனவே, இந்தக் கடிதம் சம்பந்தமாக போலீஸ் அதிகாரிகள் நவாப் ஆசிரியர் ராஜேந்திரனை அழைத்துக் கொண்டு, அழிக்கோடன் ராகவன் வீட்டுக்கும், மற்றும் சில இடங்களுக்கும் சென்று மேற்படி கடிதத்தைக் கைப்பற்ற முயன்றார்கள். அதேபோலீஸ் அதிகாரிகள்தான் தன்னைக் கடத்திக்கொண்டு போய் காருக்குள்ளும், ஒரு வீட்டு அறைக்குள்ளும் வைத்து கடுமையாக அடித்துத் துன்புறுத்தி— ஒரிஜினல் கடிதத்தையும், அதன் போட்டோ காப்பிகளையும் பிடுங்கிக்கொண்டு அப்படியே ஒரு காரில் ஏற்றி கோயம்புத்தூருக்குக் கொண்டு போனதாகவும், கோயம்புத்தூருக்கு அருகில் கார்போய்க் கொண்டிருக்கும் போதே— தன்னை வெளியே தள்ளிவிட்டுப் போய்விட்டார்கள் என்றும், நவாப் ஆசிரியர் இன்று கோர்ட்டில் கூறினார்.

—"தேசாபிமானி",

### மின்சார வெட்டினால்

## நங்கல் உரத் தொழிற்சாலைக்கு மூடு விழா

புதுடெல்லி, அக். 3— நாட்டில் இன்று ஏற்பட்டிருக்கும் மின்சார வெட்டினால் நங்கலிலுள்ள பெரும் உரத் தொழிற்சாலைக்கு இன்னும் சில தினங்களில் மூடு விழா நடத்தப்படவிருக்கிறது. இந்தியாவின் உரத் தொழிற்சாலைக் கழகம் இந்த முடிவினை மேற்கொண்டுள்ளது.

மத்திய பாசன - மின்சார அமைச்சர், உரத் தொழிற்சாலைக்கு மூடுவிழா நடத்துவதை தற்காலிகமாக நிறுத்தி வைக்கும்படி யோசனை கூறியுள்ளார். பஞ்சாப் மின்சார உற்பத்தியில் முன்னேற்றம் அடையும்வரை உரத் தொழிற்சாலையை மூடவேண்டாம் எனவும் வேண்டிக் கொண்டார்.

அமைச்சரின் யோசனையை உரக்கழகம் ஏற்றுக்கொண்டதாகக் கூறப்படுகிறது. தொழிற்சாலையைக் கதவடைப்புச் செய்யும் காலத்தில், தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கவேண்டுமென்ற முடிவு எடுத்தால் சம்பளம் தருவதற்கு உரக்கழகம் ஒப்புக் கொண்டுள்ளது.

### மூடுவிழா நடப்பதேன்?

இத்தொழிற்சாலைக்கு நங்கல் மின் திட்டத்திலிருந்து 164 மெகாவாட் மின்சாரம் அளிக்கப்பட்டு வந்தது. ஆனால் இப்பொழுது 98 மெகாவாட்டாகக் குறைக்கப்பட்டுள்ளது. தற்பொழுது அளிக்கப்பட்டு வரும் 98 மெகாவாட்டிலிருந்தும் 60 மெகாவாட்டாக குறைக்கப்பட்டுள்ளது. ஆகவேதான் இந்திய உரக் கழகம் நங்கல் உரத் தொழிற்சாலைக்கு மூடுவிழா நடத்தத் தீர்மானித்துள்ளது.

## வெண்ணெயிருந்தும் நெய் இல்லை

### அரசு நிர்வாகத்தின் அலங்கோலம் காணீர்

புதுடெல்லி, அக். 4— தேவையான நிலக்கரி கிடைக்காததால் பல தொழிற்சாலைகளில் சரிவர உற்பத்தி செய்யமுடியவில்லை.

ஆனால் அதேசமயத்தில் நிலக்கரி சுரங்கங்களில் ஏராளமான நிலக்கரி குவியல்கள் சீந்துவாரற்று கிடக்கும் ஒரு விசித்திரமான சூழ்நிலை உருவாகியுள்ளது. இத்தகவலை மத்திய உருக்கு, சுரங்க அமைச்சரகம் அறிவித்தது.

நிலக்கரி கிடைக்காததால் செங்கல் சூளைகள், மற்றும் நிலக்கரியை எரிபொருளாகப் பயன்படுத்தும் பெரிய, சிறிய தொழிற்சாலைகள் முழு அளவு உற்பத்தி செய்ய முடியாமல் தத்தளிக்கின்றன.

ஆனால் அதே சமயத்தில் நிலக்கரிச் சுரங்கங்களில் சுமார் 90 லட்சம் டன்களுக்கும் மேற்பட்ட நிலக்கரிகள் குவிந்து கிடக்கின்றன.

### தட்டுப்பாடு

இதற்குக் காரணம் இந்த நிலக்கரிகளை ஏற்றிச் செல்லத் தேவையான இரயில்வே வாகன்கள் இல்லாததுதான்! 1969-ம் ஆண்டிலிருந்தே இந்த வாகன் தட்டுப்பாடு ஆரம்பமாகி விட்டது.

வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யுமளவுக்கு வாகன்களை உற்பத்தி செய்ய இந்தியா திறம் படைத்திருக்கிறது. இருந்தும் அரசாங்கம் இத்துறையில் சரியான கவனம் செலுத்தாமல் அசட்டை செய்ததே இந்த விசித்திரமான சூழ்நிலை உருவாகியுள்ளது.

-விபரம்: 'எகனமிக்டைம்ஸ்'




### பாதை திறக்கப்படுமா?

ஐயா.

பல்லாண்டு காலமாக இருந்துவந்த மதுரை திருப்பரங்குன்றம் சாலை, சுப்பிரமணியபுரம் இரயில்வேகேட்டுடன் அடைபடப் போகிறது.

மதுரை சுப்பிரமணியபுரம் மேல் பாலம்கட்டியது துரிதமாக போகக்கூடிய வெளியூர் பிளசர், லாரி, பஸ்களுக்குத்தான் கட்டியதே தவிர, மதுரை மாநகராட்சிக்கு உட்பட்ட சுப்பிரமணியபுரம், அதைச்சேர்ந்த பகுதி மக்களுக்கு எந்தவிதமான நன்மையுமில்லை. ரோடு அடைபடுவதால்இரயில்வே பாலத்தைக் கடக்க-படியின் மேல் ஏறிவந்து மீண்டும்படி வழியே இறங்கி வரவேண்டும. இதற்காகப் படிகளும் கட்டப்படுகிறது. இதனால் இப்பகுதியில் உள்ள ஐம்பதினாயிரம் மக்களுக்குச் சிரமம் ஏற்படும்.

மதுரை மாநகராட்சியில் பாதை வேண்டுமென்று தீர்மானம் போட்டும், அண்மையில் நடந்த மதுரை மாவட்ட திமுக மாநாட்டிலும் பாதை வேண்டுமென்று தீர்மானம் போட்டு இருந்தும் அதையும் மீறி, பாதை அடைபடப் போகிறது.

உதாரணமாக, திருச்சி ஜில்லா திருவெறும்பூரில் பாலமும், ஒன்று உண்டு. அதன் பக்கத்தில் பாதை வேண்டுமென்று திருவெறும்பூர் மக்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க அவ்விடம் மேல் பாலத்துடன், கீழே பாதையும் இருக்கின்றது.

ஆகையால் மதுரை மாநகராட்சியும், மத்திய மாநில அரசுகளும் சேர்ந்து, கீழேஉள்ள பாதை அடைபடாமல் அமைத்துக் கொடுத்தால் தான, திருப்பரங்குன்றம் சாலைத் தொடர்பும்- சுப்பிரமணிய புரம், அதைச்சேர்ந்த பகுதி மக்களுக்கு போகவர வசதியும் ஏற்படும்.

ஆகவே கீழேஉள்ள பாதையில் படிகள் கட்டுவதை நிறுத்தி, பாதையை திறந்துவிட்டு, இப்பகுதி மக்களின் அவலநிலை தீர உதவவேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம்.

கே. அப்துல்,
டெய்லர்
மதுரை-11

## கருணாகரன் பதவி விலகியேதீரவேண்டும்

### கேரளத்தில் எதிர்ப்பு வலுக்கிறது

கொச்சி, அக். 8— கேரளத்தில்சட்டஒழுங்கு நிலைமை,முறிவின்விளிம்பில் உள்ளது. இதைச் சீர்திருத்த, இ. காங்கிரஸ் போலீஸ் அமைச்சர் கே. கருணாகரன் பதவியிலிருந்து விலகியாகவேண்டும் என இன்று இங்கு கேரளக் காங்கிரஸ் கட்சித் தலைவர் கே. எம். ஜார்ஜ் கோரினார்.

இங்கு செய்தியாளர் கூட்டம் ஒன்றில் பேசிய கே. எம். ஜார்ஜ், "அரசியல் கொலைகள் பெருகுவது, சிறு நகரங்களிலும், பெருநகரங்களிலும்அடையாளம தெரியாத சடலங்கள் கண்டெடுக்கப்படுவது, போலீஸ் படை பவனி ஆகியவை மக்களிடம் கொடுங்கோன்மையையும், அச்சத்தையும் பாதுகாப்பில்லை என்ற உணர்ச்சியையும் உண்டாக்கியுள்ளன.

முன் எப்போதும் இல்லாத இந்த நடவடிக்கைகள் எல்லாம், கேரளம், மேற்கு வங்கத்தின் வழி நோக்கிச் செல்லுகின்றது என ஐயம் சிறிதுமின்றி நிரூபித்துவிட்டன.

இந்தக் காலகட்டத்தில் மத்திய அரசாங்கம் வெறுமனே ஊமைபோல் கேரளத்தில் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதைவிட மாறாக,கருணாகரனை அமைச்சரவையைவிட்டு வெளியேறும்படி நிர்ப்பந்திக்க வேண்டும்.

கருணாகரன் போலீஸ் அமைச்சராகப் பதவியேற்றது தொட்டு, கேரளத்தில் சட்ட — ஒழுங்கு நிலைமை சீர்குலைய ஆரம்பித்துவிட்டது.

இளைஞர் காங்கிரஸ்; மாணவர்சங்கம் ஆகியன கொடுங் கோன்மையையும், வன்முறையையும் கட்டவிழ்த்துவிட்டன. எதிர்க் கட்சியினரையும் அவர்களின் தலைவர்களையும் தாக்கத் துவங்கினர். இவர்களது நெருக்கடியால் போலீஸ் செயலற்றுப்போய் விட்டது.

குற்றம் சாட்டப்பட்ட தனது கட்சிக்காரர்களுக்கு, போலீஸ் அமைச்சர் பாதுகாப்புத் தருகிறார். அவர்கள் மீது எந்த நடவடிக்கையும் எடுப்பதில்லை.

இந்திரா காங்கிரசார் தயவில், தான் இருக்கின்ற காரணத்தால் முதலமைச்சர் அச்சுதமேனன் வெறும பார்வையாளராகவே திகழ்கிறார்.

### அச்சுதர் மௌனம் ஆனது ஏன்?

அழிக்கோடன் ராகவன் கொலை சம்பந்தமாக கருணாகரனுக்கு எதிராக நம்பூதிரிபாடு சட்டமன்றத்திலேயே குற்றம் சாட்டினார். அதுபோது முதல்வர் அச்சுதன் வாய்மூடிக் கிடந்தது அவருக்கே வெட்ககரமானதாகும்.

சட்டமன்றத்திற்கு உள்ளே மட்டுமில்லாது வெளியேயும் இந்த புகாரை கூறியுள்ளார் நம்பூதிரிபாடு. ஆனாலும், ஆளும் கூட்டணி காதுகேளாதவன் போலிருக்கிறது.

ராகவன் அடையாளம் தெரியாத சிலரால் கொலை செய்யப்பட்ட தினத்தன்று கொலைக்குச் சில மணி நேரங்களுக்கு முன்பே வடக்கன்சேரியில் கம்யூனிஸ்டு ஐக்கியக் கேந்திரத்தின் தலைவர் ஏ. வி. ஆர்யன் கைது செய்யப்பட்டு விட்டார். இது, கருணாகரனது தனி உதவியாளர் கடித விவகாரத்திற்கும் ராகவன் கொலைக்கும் தொடர்பிருக்கிறது என்ற ஐயத்தை மக்களிடம் உருவாக்கியிருக்கிறது, இவ்வாறு கே: எம். ஜார்ஜ் கூறினார்,

மற்றொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் தேர்தல் நேரத்தில் தந்த வாக்குறுதியை நிறைவேற்றும் விஷயத்தில் அச்சுதன் ஆட்சி பரிதாபமாக தோற்று விட்டது என்றார் ஜார்ஜ்.

### கிள்ளையில் பி. ராமமூர்த்திக்கு வரவேற்பு

சிதம்பரம் அக் 5— மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர் பி. ராமமூர்த்தி கடந்த செப். 26-ந் தேதி சிதம்பரம் வட்டம் கிள்ளைக்கு வந்தபோது அவருக்கு செந்தொண்டர்கள் வரவேற்பு கொடுத்தனர்.

அன்று பகல் உஸ்மான் டாக்கீசில் நடைபெற்ற கட்சி அங்கத்தினர்கள் பேரவைக் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி கலந்து கொண்டு பேசினார். கூட்டத்தில் 250 தோழர்கள் கலந்து கொண்டனர். விலைவாசி உயர்வு போராட்டம் பற்றியும், கட்சி தோழர்கள் கடமை பற்றியும் ரிப்போர்ட் செய்தார். தோழர் டி. ஆர். விஸ்வநாதன் சிதம்பரம் வட்டத்தில் விலைவாசி உயர்வு எதிர்ப்பு இயக்கம் குறித்து விரிவாகப்பேசினார். தோழர் கே. சீனுவாசன் நன்றி கூறினார்.

அன்று மாலை அதிர் வேட்டுகள் முழங்க தோழர் டி. ராஜாராமன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. 3 ஆயிரம் பேர் கலந்து கொண்ட பொதுக்கூட்டத்தில் ராமமூர்த்தி விலைவாசி உயர்வுக்கும், வேலையில்லா திண்டாட்டத்திற்கும் காரணம் குறித்தும், மத்திய மாநில அரசு எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்தும், மக்கள் அதற்கு நடத்த வேண்டிய போராட்டம் பற்றியும் விரிவாகப் பேசினார்.

## விலைவாசிகள் உயருவதேன்?

**பணக்காரர்கள் மீது வரிவிதிக்காமல் பற்றுக்குறை பட்ஜெட் தயாரிப்பதாலே ...**

**ஃ அறிவித்த பற்றுக்குறை பட்ஜெட் 412 கோடி ரூபாய்!**
**இது 1971ம் ஆண்டில் சமர்ப்பித்த அறிக்கை — ஆனால்**
**ஃ அச்சடித்துக் கொண்டதோ 900 கோடி ரூபாய்**
**இது இறுதியில் சொல்லப்படும் கணக்கு**

**பண வீக்கத்தை உண்டாக்குவது யார்?**
**விலைவாசிகளை உயர்த்துவது யார்?**

**இந்திரா அரசு- காங்கிரஸ் அரசு!**

# விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து

# ★ விலைவாசி உயர்வு ★ வேலையில்லாத் திண்டாட்டம் ★ வரிக்கொடுமை ஆகியவற்றை எதிர்த்து

# தமிழகமெங்கும் உண்ணாவிரதம்

## அக். 9, 10 தேதிகளில் ஆர்ப்பாட்டம்.

மதுரை, அக். 6---

விலைவாசிகளோ என்றும் கண்டிராத அளவுக்கு ஏறிவிட்டன. அதே போல், வேலையில்லாக் கொடுமையும் முன்னெப்போதும் கண்டிராத அளவு அதிகரித்து விட்டது.

விலைவாசிகளைக் குறைப்போம்! வேலை கொடுப்போம்! வறுமையை ஓட்டுவோம்!- என்று வாக்குறுதியளித்து ஆட்சி பீடம் ஏறினவர்கள் அதற்காக எடுக்கப் படவேண்டிய தீவிர நடவடிக்கைகள் எதையும் மேற்கொள்ளவில்லை.

இதனுல் ஆத்திர ஆவேச முற்ற இந்திய மக்கள் என்றும் கண்டிராத கிளர்ச்சிகளில் இறங்கிவிட்டார்கள்.

தமிழ் நாட்டிலும் மக்கள் நடத்தும் கிளர்ச்சியில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தீவிரமாக ஈடுபட்டுள்ளது.

இதோ, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையில் திருச்சி மாவட்டத்தில் நடக்கும போராட்டத்தின் முதல் கட்டமாக நடைபெறும் உண்ணாவிரத இயக்கத்தைப் பிரசுரிக்கிறோம்.

### திருச்சி வட்டாரம்

3—10—72 முதல் 5-10-72 வரை 3 நாள் உண்ணாவிரதம்.

நடைபெறும் இடங்கள்.

உறையூர் பொன்மலை

6—10—72 முதல் 8-10-72 வரை 3 நாள் உண்ணாவிரதம்.

தாராநல்லூர்
திருவானைக்காவல்
காட்டூர்
செந்தண்ணீர்புரம்
திருவெறும்பூர்
பேட்டவாய்த்தலை

ஆகிய இடங்களில் நடைபெறும்.

8-10-72 முதல் 10-10-72 வரை 3 நாள் உண்ணாவிரதம். பீமநகர்

10—10—72 பெண்கள் உண்ணாவிரதம்

தோழர் பாப்பா தலைமையில் டவுன்ஹால் முன்பு நடைபெறும்.

### நம்பியார் தலைமையில் மறியல்

18—10—72 திருச்சி தெப்பக்குளம் தபால் ஆபீஸ் முன்பு
தோழர் கே. ஏ. நம்பியார் (தலைமையிலும்)

19—10—72 திருச்சி கோட்டை கடைவீதி தபால் நிலையம் முன்பு.
தோழர் பி. ராமச்சந்திரன் (தலைமை)

20—10—72 திருச்சி ஜங்ஷன் அரசு போக்கு வரதது நிலையம்—ஸ்டேட் டிரான்ஸ போர்ட் நிலையம் முன்பு
பி. ஏ. ஆனந்த் தலைமையிலும்

18—10—72 புதுக்கோட்டை தபால் நிலையம் முன்பு தோழர் ஆர். உமாநாத் தலைமையிலும் மறியல் போராட்டம் நடைபெறும்.

## கோவை வடபகுதியில் 12 இடங்களில் உண்ணாவிரதம்

கோவை. அக். 5—
விலைவாசி உயர்வையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும்கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கோவை தாலுகா வடக்குக் கமிட்டி சார்பில் அக். 1-ந் தேதி காலை 8 மணிக்கு உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது.

மொத்தம் 12 இடங்களில் 65 தோழர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். விவரம் வருமாறு:—

### சின்னியம்பாளையம்

ராமசாமி(தலைமை)
சிருஷ்ணன
டி. கே. வேலுச்சாமி
கே. கே. வேலுச்சாமி
பழனிச்சாமி

### காளப்பட்டி

வி. கணேசன்(தலைமை)
கே. கோபால்
ஆர். கோபால்
பி. கந்தசாமி
கே. தங்கவேலு
பி. ராஜகோபால்

### விளாங்குறிச்சி

வி. ஆர். அர்ஜுனன் (தலைமை)
எஸ். கிருஷ்ணசாமி
குருந்தாசலம்
சிகாமணி
கிருஷ்ணசாமி

### சிவானந்தபுரம்

ஆர். திருவேங்கடம் (தலைமை)
ஏ. மாரப்பன்
எஸ். துரைசாமி
எஸ். கே. பொன்னுசாமி
எஸ். ஏ. பழனிசாமி

### கணபதி

முருகன்(தலைமை)
ஆர். முருகேசன்
எம். கிருஷ்ணன்
சி. ரத்தினம்
ஆர். மணி
ஜி. பி. கருப்புசாமி

### கணபதிபுதூர்

மணி(தலைமை)
நடராஜன்
சுப்ரமணியம்
டி. கிருஷ்ணன்
ரத்தினசபாபதி

### மணியகாரன்பாளையம்

முத்துசாமி(தலைமை)
பி. கிருஷ்ணன்
எம். கந்தசாமி
கிட்டுசாமி
முருகன்
காளியப்பன்

### உடையாம்பாளையம்

சின்னப்பன்(தலைமை)
அய்யாசாமி
குமாரசாமி
ஜெகநாதன்
நடராஜன்

### துடியலூர்

வரதராஜ்(தலைமை)
மாரிமுத்து
சின்னசாமி
துரைசாமி
நடராஜ்
குமரன்

### சர்க்கார்சாமக்குளம்

ராமசாமி(தலைமை)
ஆறுமுகம்
ரததினசாமி
விஷ்வநாதன்
மருதாசலம்

### பெரியநாயக்கன்பாளையம்

வி.கே.ஜெகநாதன்(தலைமை)
டி. பாலசுப்ரமணியம்
ஜி. கே. சீனிவாசன்
பி. ஆறுச்சாமி
ஆ. வெள்ளியங்கிரி

### சோமையனூர்

கே. ராமசாமி(தலைமை)
ஆர். ராமசாமி
ஆர். முத்துசாமி
ஆர். நடராஜ்
ஏ. கிருஷ்ணசாமி

### கோவை தெற்கு தாலுகாவில்

பேரூரில் அக். 1 முதல் 4 தேதி வரை, தோழர் கே. குமாரசாமி தலைமையில் எம் மாரியப்பன், ஏ பொன்னுசாமி, பி. நாச்சி முத்து, ஆர் பரமசிவம், ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தார்கள் தோழர்கள் பி ஆர் சுந்தரராஜ், கே காரமடை ஆகியோர் உண்ணாவிரத வீரர்களை வாழ்த்தியும், மத்திய மாநில அரசுகளின் கொள்கைகளைக் கண்டித்தும் பேசினுர்கள்.

### தெலுங்குபாளையம்

பேரூர் ரோடு தெலுங்கு பாளையம் பிரிவில், தோழர் ஆர் சின்னச்சாமி தலைமையில், ஆர். அங்கமுத்து, டி வி பெருமாள், என் பெருமாள், லெனின், நாகப்பன் உண்ணாவிரதம் இருந்தனர். அவர்களை நூற்றுக்கணக்கான விவசாயத் தொழிலாளர்களும், நியூ ரப்பர் கம்பெனி தொழிலாளர்களும் ஊர்வலமாக அழைத்துவந்தனர். தோழர் கே. காரமடை துவக்கி வைத்தார்.

### குனியமுத்தூர்

இங்கு தோழர்என்.கிருஷ்ணன் தலைமையில் ஆர். வெங்கிடாசலம், பி. ராமச்சந்திரன், எஸ். ஏ.ரங்கசாமி எஸ். அருச்சுண கவுண்டர் ஆகியோர் மேற்கொண்ட உண்ணாவிரதத்தை தோழர் எம். நஞ்சப்பன் துவக்கி வைத்தார்.

### மதுக்கரை

தோழர் ஜெ. வேதநாயகம் தலைமையில் ஆர்.நாச்சிமுத்து. வி. ராமன், சின்னக் கருப்பணகவுண்டர் ஆகியோர் உண்ணாவிரதம் இருக்க தோழர் கோபால் பணிக்கர் துவக்கிவைத்தார்.

### போத்தனூர்

தோழர் வி. சுப்ரமணியம் தலைமையில் கே. பாஸ்கரன் அய்யாசாமி, ஏ. ராஜகோபால், சி. ராமலிங்கம் ஆகியோர் உண்ணாவிரதம் இருக்க தோழர் கே. சுப்பிரமணியம் உண்ணாவிரதத்தை துவக்கி வைத்தார்.

### வெள்ளலூர்

தோழர் இ கே ஆர்ச்சாமி தலைமையில் என். தண்டபாணி, கே. ஆர். கிருஷ்ணன் ஆகியோர் உண்ணாவிரதமிருக்க தோழர் சோமசுந்தரம் துவக்கிவைத்தார்.

### ஒத்தக்கால் மண்டபம்

தோழர் பி கே இளங்கோவன் தலைமையில் கே நாராயணசாமி, ஆர் ராஜு, நாராயணசாமி, வி சுப்பிரமணியம் ஆகியோரின் உண்ணாவிரதத்தை தோழர் ஆர் ஏ கோவிந்தராஜ் துவக்கிவைத்தார்.

### திருப்பூர்

இங்கு அக். 1 முதல் 7 வரை மூன்று கட்டங்களாக, ஒவ்வொரு இடத்திலும் 5 பேர்கள் வீதம் 10 இடங்களில் உண்ணாவிரதம் நடைபெற்றறு வருகிறது.

அனுபபர்பாளையம் புதூர்' குமாரநகர், புஷ்பாதியேட்டர் சமீபம், பி.என். மெயின் ரோடு, கொங்குயின் ரோடு குமரன் சிலை, நகராட்சி அலுவலகம் முன்பு, மத்திய பஸ்நிலையம் முன்பு,காட்டன் மார்க்கெட் அருகில் தாராபுரம் பாதை பி டி ஆர் திடல் ஆகிய இடங்களில் உண்ணாவிரதம் இருந்தார்கள்.

### காரமடை

விலைவாசி உயர்வு வேலையில்லா திண்டாத்தை எதிர்த்து அக். 1 முதல் காரைமடை காந்தி மைதானத்தில் தோழர் ஆர். சாம்பையன் தலைமையில் தோழர்கள் ஏ. கண்ணன், சாமிநாதன், எஸ். பழனியப்பன், பீ.ராமன், டி.ஆர், ஈஸ்வரன் ஆகியோர் முதல் கட்டமாக உண்ணாவிரதம் இருக்கின்றர்.

தோழர் பி, சுந்தரராஜன் உண்ணாவிரதத்தை துவக்கி வைத்தார். தோழர்கள் ரங்கசாமியும், ஆர் சோலையனும் உண்ணாவிரதத்தை வாழ்த்திப் பேசினர்.

இரண்டாம் கட்டமாக தோழர்கள் ஆர். லெட்சுமணன், நாகாராஜன், நாராயணன், கே. பழனிச்சாமி சின்னன், ஏ, கந்தசாமி ஆகியோர் அக், 3 வரை உண்ணாவிரதம் இருப்பர்.

அக். 8, 9, 10 தேதிகளில் ஆர்ப்பாட்டமும், அக். 18, 19, 20 தேதிகளில் மத்திய -மாநில அரசு அலுவலகங்கள் முன்பு மறியல்போராட்டமும் நடைபெறும்.

### தாராபுரம்

விலைவாசி உயர்வையும், வேலையில்லா திண்டாட்டத்தையும் எதிர்த்து அக். 1-ல் நகரின் 5 இடங்களில் உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது.

உண்ணாவிரதத்திற்கு முன்பு கட்சி அலுவலகத்திலிருந்து ஊர்வலமாக உண்ணாவிரதம் நடக்கும் இடங்களுக்கு தோழர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர்.

நகர் அஞ்சல் அலுவலகம் முன்பு தோழர் வி நடராஜ் தலைமையில் 5தோழர்களும், தாலுகா அலுவலகம் முன்பு என் சுப்பிரமணி தலைமையில் 5 தோழர்களும், சோளக்கடை வீதியில் சி. தண்டாயுதபாணி தலைமையில் 5 தோழர்களும், சின்னக்கடை வீதியில் தோழர் எம் தங்கமுத்து தலைமையில் 5 தோழர்களும், நகரவை அருகில்தோழர் சி வெள்ளையன் தலைமையில் 5 தோழர்களும் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். அன்று நடந்த உண்டியல் வசூலில் ரூ 157-50 வசூலானது.

அக். 4 முதல் 7ம் தேதி வரை 25 தோழர்கள் தொடர்ந்து உண்ணாவிரதம் இருக்கின்றர்.

அக் 8-ல் தாராபுரம் கோவில் முன்பு பிரச்சார பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

அக் 9-ல் மாலை 4மணிக்கு தாலுகா அலுவலகம்முன்பும் தபால் அலுவலகம் முன்பும் ஆர்ப்பாட்டம் நடைபெறும்.

அக். 18,19,20 தேதிகளில் நடைபெறும் மறியலில் விவசாயிகளும், மில் தொழிலாளர்களும் 200க்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொள்வர்.

தோழர் டி. பி. முத்துச்சாமி போராட்டங்களை விளக்கி பிரச்சாரம் செய்து வருகிறர்.

### கோபியில்

தோழர் வி ஆர் மாணிக்கம் தலைமையில் தோழர்கள் பி பி பொன்னுச்சாமி. கே என் வேலுச்சாமி என் கே ஜோதி, மோகன், டி எஸ் பகவதிக்கவுண்டர் ஆகியோர்2—10—72ந்தேதி முதல் 3 நாள் தலைமை அஞ்சல் அலுவலகம் முன்பு உண்ணாவிரதம் மேற்கொண்டார்கள்.

அக் 5 முதல் தோழர் ஏ முத்துக்கவுண்டர் தலைமையில் மூன்று நாட்களுக்கு உண்ணாவிரதம் இருக்கிறர்,

### பெரியநாயக்கன்பாளையம்

இங்கு ஸ்டாலின் மன்றத்திலிருந்து அக் 1-ல் தோழர் ஆறுச்சாமி(எல் எம். டபுள்யூ), தீக்கதிர் ராஜன் ஆகியோர் தலைமையில் ஊர்வலமாக வந்து உண்ணாவிரதப் பந்தலை அடைந்தனர்.

முதல்கட்ட உண்ணாவிரதத்தில் தோழர்கள் வி. கே. ஜெகநாதன், டி. பாலசுப்ரமண்யம் (எல். எம். டபுள்யூ., சி ஐ டி யூ. தலைவர்), ஆறுச்சாமி, கே. வெள்ளியங்கிரி, பயனீயர் ஜி. சீனிவாசன் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

பஞ்சாயத்து போர்டு உறுப்பினர் தோழர் நாராயணசாமியும், ஆப்ராஹாம் லிங்கனும், தீக்கதிர் ராஜனும வாழ்த்துரை வழங்கினர்.

இரண்டாம் கட்ட உண்ணாவிரதத்தில் தோழர்கள் ஆப்ரஹாம் லிங்கன், எஸ் சோழன், பி பழனிச்சாமி, கே லெட்சுமணன், மோகன் (எம் எம் டபுள்யூ) சி ஐ டி யூ ஆகியோர் பங்குகொண்டார்கள்.

### உடுமலைப்பேட்டை

இங்கு அக்டோபர் 1ம் தேதி முதல் 4-ம் தேதிவரை 3 இடங்களில் உண்ணாவிரதம் நடத்தப்பட்டது. மத்திய பஸ் நிலையம் முன்பு தோழர் ஆர் பார்த்தசாரதி தலைமையில் தோழர்கள் எஸ். மயில்சாமி, ஆர். நடராஜன்என்பார்த்தசாரதி ஆகியோரும் தபால்-தந்தி அலுவலகம் முன்பு தோழர் ஆர் மௌனசாமி தலைமையில் தோழர்கள் போ,நாயக்கர், நாராயணசாமி, பாலகுருசாமி ஆகியோரும் காந்தி திடலில், தோழர் என், வெங்கிடாசலம் தலைமையில் தோழர்கள் வெங்கிடுசாமி. வேலுசாமி, கருப்பணன் ஆகியோரும் 1-ந் தேதிமுதல் 4-ந்தேதி வரை தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்தனர்.

### கொழுமம்-குப்பம்பாளையம்

உடுமலைக்கொழுமம் - குப்பம்பாளையத்தில், தபால்-தந்தி அலுலலகம் முன்பு, 1-ந் தேதிமுதல் 4-ந் தேதி வரை உண்ணாவிரதம் நடைபெற்றது. தோழர் என். ராஜு தலைமையில், எஸ் வேலுச்சாமி, கே பழனிச்சாமி, எம் நாச்சிமுத்து கே இதயதுல்லா, ஆகிய ஐவர்,3 நாட்கள் தொடர்ந்து உண்ணாவிரதம் மேற்கொண்டனர்.

உண்ணாவிரதப் போராட்டத்தில் 2-ம் கட்டமாக, உடுமலையில் 4 இடங்களில் 4-ம் தேதி முதல் 7.ம் தேதி வரை உண்ணாவிரதம அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. மத்திய பஸ் நிலையம முன்பு தோழர் எஸ் வெங்கிடாசலம் தலைமையிலும், காந்தி திடலில் தோழர் எம் மலையப்பகவுண்டர் தலைமையிலும், கொழுமம குப்பம் பாளையம் தபால் நிலையம் முன் தோழர் எம். பார்வதி தலைமையிலும் உண்ணாவிரதம் நடந்தது.

### பொள்ளாச்சி

இங்கு முதல் கட்டமாக அக், 1 முதல் 4 வரை, தாலுகா அலுவலகம் முன், தோழர், பி ஏ சலீம் தலைமையில் தோழர்கள் புருஷோத்தமன், சிவலிங்கம, சேகர், முருகேசன் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

மத்திய தாபல் நிலையம் முன்பு, தோழர் என். சாமிநாதன் தலையில், தோழர்கள் நாராயணசாமி, நடராஜன். பழனியப்பன், பொன்னுச்சாமி ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

இவ்விரண்டு இடங்களிலும் போராட்ட அவசியத்தை விளக்கி தோழர் கே. சி. கருணகரன் பேசினுர்,

அக் 4 முதல் 7தேதிவரை தாலுகா அலுவலகம்முன்

[4-ம் பக்கம் பார்க்க]

## வேலையில்லாக் கொடுமை காணீர்!

அரசாங்கத்தின் புள்ளி விவரப்படி
வேலை கொடு என்று பதிவு செய்தோர் —

1970-ல் 34 இலட்சத்து 50 ஆயிரம் பேர்
1971-ல் 42 இலட்சத்து 20 ஆயிரம் பேர்
1972-ல் 52 இலட்சத்து 50 ஆயிரம் பேர்

ஈராண்டில் அதிகரிப்பு 18 இலட்சம் பேர்
மதுரை மக்கட் தொகை போல் மூன்றரை மடங்கு.
பதிவு செய்யாதோர்..... வேலையில்லாதோர்..
5 கோடிக்கு மேல்

## மத்திய அரசு ஊழியர்கள் 'பழிவாங்குதலுக்கு எதிர்ப்பு'



கோவை, அக். 19—
கோவை ஆர். எம். எஸ். ஊழியர்களும், கோவை தபால் தந்தி ஊழியர்களும் அரசின் பழிவாங்கலை எதிர்த்து தலைமை அஞ்சலகத்திற்கு முன் ஆர்ப்பாட்டம் நடத்தினுர்கள்.

1958 செம்படம்பர் மாதம் குறைந்தபட்ச ஊதியத்திற்காக போராடிய ஊழியர்கள் மீது அரசின் அடக்குமுறையால் உயிர்நீத்த தியாகிகளுக்கு நினைவுச் சின்னம் உருவாக்கப்பட்டது.

தியாகிகள் நினைவுச் சின்னத்திற்கு முன்பு, காலையிலும்,மாலையிலும் அனைத்து ஊழியர்களும் கூடி, அரசின் பழிவாங்கலை எதிர்த்து கோசங்களை எழுப்பி ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள். வேலை நீக்கம் செய்யப்பட்ட ஊழியர்கலை உடனே வேலைக்கு எடுக்குமாறும், ஊழியர்கள் மீதுள்ள கோர்ட் கேஸ்களை வாபஸ் வாங்குமாறும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

## போலீசார் வழக்கு பொய்யானது

நாகர்கோவில் அக் 5-
சென்ற மார்ச் மாதம் திங்கள் சந்தை சமீபமுள்ள பெருங்கோட்டில் இரட்டை கொலை நடந்ததும், அதை யொட்டி வேலப்பன் என்பவர் இரணியல் காவல் நிலையத்தில் இறந்ததும். இவைகள் பற்றி ஆர். டி. ஓ. விசாரணை நடந்ததும் ஆர்.டி.ஓ. முன் வாக்குமூலம் கொடுத்த திரு ஆண்டி என்ற செருப்பு தைக்கும் தொழிலாளி மீது இரணியல் போலீஸ் தற்கொலைக்கு முயன்றதாக வழக்கு தொடுத்தது.

ஆனல் 29-9-72ல் இரணியல் மாஜிஸ்டிரேட் ஆண்டியை விடுதலை செய்து தீர்ப்புக் கூறினர்.

இவ்வழக்கை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நடத்தியது ஏற்கனவே தீக்கதிரில் வந்துள்ளது.

## பிரமைகள் தகருகின்றன கூட்டாளிகள் கம்பி நீட்டுகின்றனர்

### இந்திரா ஆட்சி பற்றி "மெயில்" ஏட்டின் வருணனை

''பிரதமர் இந்திரா காந்தி மீது இருந்த பிரமைகளெல்லாம் இன்றைய பொருளாதார நெருக்கடி தீவிரமாகும் சூழ்நிலைகளிலிருந்து தகர்ந்து தரை மட்டமாயின'' என்று ''மெயில்'' ஏட்டில் அதன் சிறப்புச் செய்தியாளர் டெல்லியிலிருந்து கீழ்வருமாறு எழுதுகிறர்:—

சமீப மாதங்களில் இந்தியாவின் அரசியல் அரங்கம் குறிப்பிடத்தக்க அளவு மாறிவிட்டது. வளர்ந்து வரும் பொருளாதார நெருக்கடிதான் பெரும்பாலும் இதற்குக் காரணம்.

தொழில் துறையில் அமைதியின்மை, நாட்டின் சில பகுதிகளில் பலாத்கார நிகழ்ச்சிகள், மாணவர்களிடையே கொந்தளிப்பு, அத்தியாவசிய பண்டங்களின் விலையுயர்ந்த காரணத்தால் மக்களிடையே கொந்தளிப்பு — அதிருப்தி ஆகிய இவை யாவும் நம் நாட்டில் ஒரு பெரும் சோர்வு மனப்பான்மையே மேலோங்கும்படிச் செய்துள்ளன.

டெல்லி தலைநகரத்திலேயே இது பிரதிபலிக்கிறது. சமீப வாரங்களில் போலீசாருக்கும், மக்களுக்குமிடையே நடைபெற்று வரும் கல்லடிச் சண்டைகள், அதிருப்தி அடைந்துவரும் மாணவர்கள் போக்குவரத்துப் பேருந்துகளை இழுத்துக் கொண்டுபோய் ஒழித்துவைத்தல் — போன்ற நிகழ்ச்சிகள் அதிகரித்து வருகின்றன.

பிரதமர் இந்திராகாந்தியைச் சுற்றி, வளர்க்கப்பட்ட இடதுசாரி மெருகுப் பூச்சுகள், பங்களா தேசின் விடுதலை, பாகிஸ்தானை யுத்தத்தில் வெற்றி கொண்டது ஆகிய இந்நிகழ்சிகளின் காரணமாகத் தோன்றிய உற்சாகமும் இன்று கற்ருேடு காற்ருக மறைந்துவிட்டது. இன்று நம் தேசிய அரங்கில் முக்கியத்துவம் வகிப்பது — கண்ணும் மண்ணும் தெரியாத வகையில் உயர்ந்துவரும் பணவீக்கம். தொழில்துறை உற்பத்தி வளர்ச்சி ''சைபரை'' நோக்கித் தீவிரமாக வீழ்ச்சி அடைதல்,இயற்கையின் சீற்றத்தின் விளைவாக விவசாய உற்பத்தி அரங்கில் ஏற்பட்டுள்ள தோல்வி ஆகியவற்ருல் நாடெங்கும் உருவாக்கப்பட்டுள்ள அப்பட்டமானதொரு பொருளாதார உண்மையே முக்கியத்துவம் வகிக்கிறது.

வாழ்க்கையின் அன்ருடத் தேவைப் பொருள்களின் விலைவாசிகள் தொடர்ந்து உயர்ந்து கொண்டே போகின்றன. நிதி அமைச்சர் சவாண் இன்னும் கொஞ்ச காலத்திற்கு, விலைவாசிகள் தொடர்ந்து உயர்ந்து கொண்டேதான் போகும் என்கிருர். விலைவாசி உயர்வென்பது ''தற்காலிகமானதுதான்'' என்று இதற்கு முன்னர் இதே அமைச்சர்கள் பேசிய பேச்சுகள் இன்றுநம்காதில் விழவில்லை.

இந்தச் சூழ்நிலையில்தான்- பொருளாதாரத் துறையில் சாதனைகள் சாதிக்கமுடியாத பின்னணியில் தான்- இயற்கையாகவே ஓர் அரசியல் அதிருப்தி எழுந்துள்ளது. எந்த ஒரு எதிர்கட்சியாலோ அல்லது எதிர்க்கட்சிகளின் கூட்டாலோ காங்கிரஸ் கட்சி அதிகாரத்திலிருந்து இறக்கப்படும் அபாயம் தோன்றிவிட்டது என்பது அல்ல இதன் பொருள்.மாருக.''இந்தியாவின்பொருளாதாரசமூக அமைப்பைத்தீவிரமாகமாற்றும் வலிமையுள்ள ஒரு ஆயுதமே, காங்கிரஸ் கட்சி'' என்ற எண்ணத்தில இன்று பலமான அடி விழுந்துள்ளது. பொருளாதார இன்னல்களினல் மக்களிடையே ஏற்பட்டு வரும் அதிருப்தி எந்த வேகத்தில் அதிகரிக்கிறதோ அதே வேகத்தில் காங்கிரஸ் கட்சி மீதுள்ள நம்பிக்கையும் தகர்ந்து தரைமட்டமாகி வருகிறது.

இதன் விளைவுதான் தன்னுடைய நேசக் கட்சியான வலது கம்யூனிஸ்ட் கட்சிகூட காங்கிரஸ் கட்சியைக் கைவிடக்கூடிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

— ''மெயில்'' நாளேடு
5-10-72.

# வேலை கொடு; அல்லது நிவாரணம் கொடு!

# எதிரிகள் தேவை!

— தணிகைச் செல்வன் —

நாம் எல்லோரும் போராட்டம் பற்றி ஏதோ கொஞ்சம் தெரிந்து வைத்திருக்கிறோம். அது பற்றிச் சுத்தமாகத் தெரியாதவர்களுக்குக்கூட ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரியும். போராட்டம் என்றால் அதில் குறைந்தது இரண்டு பேராவது சம்பந்தப்பட்டிருக்க வேண்டும்.

ஒருவன் போர்வீரன் என்றால் இன்னொருவன் அவன் எதிரியாக இருப்பான்.

சரி! எதிரியே இல்லாமல் போரிடுகிறவனை யாராவது பார்த்ததுண்டா? சீசர் போலக், களத்துக்கு செல்லுமுன்பே பகைப்படை பறந்துவிட்டிருந்தால் 'சென்றேன்; வென்றேன்' என்று கூறிக்கொள்ளும் பேராற்றல் மிக்கவன் யாராவது கூறலாம்—'களத்தில் எதிரிகளே இல்லை' என்று.

எதிரிகள் இல்லாமல் வாள் சுழற்றும் 'டான் குவிக்சோட்' போன்ற கற்பனைக் கதாநாயகர்கூட நமக்குத் தெரிந்தவர்கள்தான்.

ஆனால் இன்னார்தான் எதிரி என்றே புரியாமல் போராடுகிறவனை நீங்கள் எங்காவது கண்டதுண்டா?

வேடிக்கையல்ல இது! விசித்திரமான உண்மை!

யார்தான் எதிரி என்று நிச்சயிக்காமலே ஒரு போராட்டம்.

அதற்குத் தேதி குறித்தாகிவிட்டது.

அகில இந்தியாவிலும் ஆர்ப்பாட்டம்! மறியல்!— இத்தனையும் நடக்கிறது. பரிதாபம் என்னவென்றால் 'எதிரி' யார் என்று தொண்டர்களுக்கும் புரியவில்லை, தலைவர்களும் சொல்லவில்லை. ஒரே குழப்பம்! குழறுபடி!

'குழப்பம்' என்று சொன்னவுடனே அந்தச் சொல்லுக்குச் சொந்தக்காரர்கள் யார் என்று இப்போது உங்களுக்குப் புரிந்திருக்கும்.

ஆம்! நீங்கள் யூகித்தது சரிதான்! வலதுகளைத்தான் குறிப்பிடுகிறோம்.

அவர்களது அக்டோபர் 'போராட்டத்தைத்'தான் குறிப்பிடுகிறோம்.

விலைவாசி உயர்வு,

வேலையில்லாக் கொடுமை.

முதலாளிகளின் கொள்ளை— ஆகியவற்றை ஒழிக்கப் போராட்டமாம். ஆல்ரைட்!

இவ்வளவுக்கும் காரணமான மத்திய 'அரசை எதிர்த்துத்தானே இந்தப் போராட்டம் என்றால்',

உடனே வலதுகள் வாயிலடித்துக் கொள்ளுகிறார்கள். "ஐயகோ! மத்திய அரசையாவது? நாங்களாவது? எதிர்ப்பதாவது? அதெல்லாம் ஒன்றும் கிடையாது! மத்திய அரசின் சறுக்கலை எதிர்த்துப் போராட்டம்" என்கிறார்கள்.

சரி! இந்தச் 'சறுக்கலுக்கு' முன் அவர்கள் சரியான பாதையில் தானே போயிருக்கவேண்டும்? எந்த ஆண்டிலிருந்து அவர்கள் சறுக்க ஆரம்பித்தார்கள்?" என்று கேட்டால்,

"1970 பிப்ரவரியில் தொழில் லைசென்ஸ் கொடுக்க ஆரம்பித்தபோதே எல்லா சலுகைகளையும் ஏகபோகங்கள் பத்துப்பேருக்குத்தான் கொடுத்தார்கள். அப்போதே 'சறுக்கல்' ஆரம்பித்துவிட்டது" என்று அழகாகப் புள்ளி விபரம் கொடுக்கிறார்கள்.

"ஆமாம்! அந்த 1970 ஆம் ஆண்டுதானே அந்த அம்மையார் 'முற்போக்கு' ஆனவருடம? அதெப்படி 'முற்போக்கான' அதே ஆண்டில் முதலாளிகளையும் 'கடைக்கணி'த்திருக்கிறார்கள்? அது மட்டுமல்லாமல், தொடர்ந்து இந்த மூன்று ஆண்டுகளாக ஏகபோகக் கொள்ளை ரூ. 300 கோடிக்குமேல் வளர வாய்ப்பளித்திருக்கிறார்களே

"இந்த மூன்றுண்டுகளில்தானே தொழிலாளர்கள் 12 கோடி மனித நாட்களை இழந்து போராடியிருக்கிறார்கள். அம்மையார் 'பிற்போக்காக' இருந்தகாலத்தில்கூட இவ்வளவு இல்லையே! மார்க்சிஸ்ட்டுகளின் 'மர மண்டைகளுக்கு' இந்த முரண்பாடு புரிபடவே இல்லை ஸ்வாமி!" என்று நாம கேட்டோம்.

"சரி! உங்கள் போராட்டம் இந்திரா அரசின் 'சறுக்கலை' எதிர்த்ததாகவே இருக்கட்டும். இந்திரா அரசு என்பது இந்திரா காங்கிரசின் அரசுதானே? இந்திரா ஆட்சியை எதிர்க்கும் நீங்கள் இந்திராகாந்தியை மட்டும் எப்படி நேசிக்க முடியும்?" இது நம் கேள்வி!

"நோ! நோ!" இது ஏகபோக முதலாளிகளுக்கெதிரான போராட்டம் என்பதைக் குழந்தைகளுக்குப் புரிகிறாற்போல் தெளிவுபடுத்திய பிறகும் இது தம்மை எதிர்த்த போராட்டம் என்று காங்கிரஸ் கட்சி கருதினால்?...... (கருதக்கூடாதாம்!)

—ஜனசக்தி (1—10—72)

தோழரே!

இது என்ன விளையாட்டு?

'இது சர்க்காரை எதிர்த்த போராட்டமா?' என்றால்,

"இல்லை 'சறுக்கலை' எதிர்த்து என்கிறீர்கள் "சறுக்கல்' என்றால்—ஆட்சியுடன் கட்சியும் அடங்கும் அல்லவா?" என்றால்—,

"இல்லை! இது முதலாளிகளை எதிர்த்து" என்கிறீர்கள்.

"சர்க்கார் அனுசரணை இன்றி எப்படி முதலாளிகள் வளர்ந்துவிட முடியும்" என்று கேட்டால்,

"ஆமாம்! இது சர்க்காரை எதிர்த்த போராட்டம்' என்பீர்கள்.

"சர்க்காரை எதிர்த்தா?" என்றால் "இல்லை! சறுக்கலை எதிர்த்து" என்று

மீண்டும்.....................

போதும்! போதும்!

இதற்கு மேலும் உங்களோடு பேசினால் எங்களுக்கும் மூளை குழம்பும். "ஜனசக்தி" தலையங்கத்தில் யாரோ ஒரு புண்ணியவான் கேட்டிருக்கிறார். 'மார்க்சிஸ்ட்டுகள் மண்டையில் ஏறுமா?" என்று! ஐயா சுவாமி! உங்கள் 'பேருண்மைகள்' எங்கள் மண்டைகளில் ஏறுததற்கு நாங்கள் எத்தனை கோடித்தவம் செய்தோமோ! யாமறியோம் 'பராபரமே'.

## பற்றாக்குறையிருந்தும் கிட்டங்கியில் தூங்கும் ரூ. 4 கோடி மதிப்புள்ள உருக்கு

அமிர்தசரஸ். அக. 4—

பஞ்சாப் மாநிலத்திலுள்ள இன்ஜினியரிங் தொழிற்சாலைகள் உருக்குத் தகடுகள் பற்றாக்குறையால் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளனர்.

ஆனால் அதே சமயத்தில் அரசாங்கக் கிட்டங்கிகளில் ரூ. 4 கோடி மதிப்புள்ள உருக்குத் தகடுகள் துருப்பிடித்துக் கிடக்கின்றன. இந்த விநோதம் இந்தியாவில்தான நடக்கும்.

### அதிகாரவர்க்கத்தின் கையாலாகாத்தனம்

இதற்குக் காரணம, பஞ்சாப் மாநில சிறு தொழில் கார்பரேஷனின் பெரிய அதிகாரிகளது லஞ்ச ஊழலும், நிர்வாகத் திறமையின்மையும் தான்.

பஞ்சாப் மாநிலத்திலுள்ள இன்ஜினியரிங் தொழிற்சாலைகள் தங்களுக்குத் தேவையான உருக்குத்தகடுகளை வெளி மார்க்கெட்டில் இருமடங்கு, மும் மடங்கு அதிக விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருக்கின்றன.

அரசாங்கத்தின் கையாளாகாத்தனத்தை கண்டு கொண்ட கொள்ளை லாப வியாபாரிகள், விலையை உயர்த்திக் கொண்டே போகின்றனர். இதனால் இன்ஜினியரிங் தொழிற்சாலைகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளன.

ஆனால் பஞ்சாப் அரசின் கிட்டங்கிகளில் ரூ. 4கோடி மதிப்புள்ள இரும்புத் தகடுகள் துருப்பிடிததுக் கிடககின்றன. இதற்குக் காரணம் என்ன?

பஞ்சாப் மாநில சிறு தொழில் கார்ப்பரேசன் ரூ. 4 கோடி மதிப்புள்ள 'பிளாக் பிளேன்' என்ற ரக உருக்குத் தகடுகளை வாங்கி அடுக்கி விட்டது. ஆனால் பஞ்சாப் இன்ஜினியரிங் தொழிற்சாலைகளுக்கு தேவையானதோ, 'கால்வனைஸ்டு பிளேன்' 'கால்வனைஸ்டு கரகேட்ட' என்ற ரக உருக்குத்தகடுகள் தாம்.

### சிறு தொழிலதிபர்களின் தலையில் கட்டுகின்றனர்

தங்கள் மாநிலத்திற்கு எந்த வகை உருக்குத் தகடுகள் தேவை என்பதைக் கூட தெரிந்து கொள்ளாத அதிகாரிகள் பதவியில் இருப்பதால்தான் இத்தகைய அவல நிலை ஏற்பட்டுள்ளது.

தற்போது பஞ்சாப் சிறு தொழில் கார்ப்பரேசன் தங்களிடம் வேறு பல உப பொருட்களுக்காகவும், கச்சாப் பொருட்களுக்காகவும் வரும் சிறு தொழிலதிபர்களின தலையில் இந்த உருக்குத் தகடுகளை சிறு தொழில் கார்ப்பரேசன் கட்டி வருகிறதாம்.

இதைவிட மோசமானது என்னவெனில் இவர்களின் தலையில் கட்டப்படும் உருக்குத் தகடுகளின் விலை வெளி மார்க்கெட்டில் விற்கப்படுவதை விட ஒரு டன்னுக்கு ரூ. 300 அதிகமாக இருக்கிறதாம்.

அரசாங்கத்தின் இப்போக்கினால் பஞ்சாப் இன்ஜினியரிங் தொழில் பெருமளவு பாதிக்கப்பட்டுள்ளது.

## இன்றைய தேர்தல் முறையை மாற்ற குடியரசுக்கட்சி போராட்டம்

பூனா, அக். 4—

இந்திய நாட்டில் தற்போதுள்ள முறையற்ற தேர்தல் முறையை மாற்ற வேண்டும் என்று வலியுறுத்தி அக்டோபர் 17-ம் நாள் முதல் நாடு முழுவதும் போராட்டம் நடத்த இந்திய குடியரசுக்கட்சி முடிவுசெய்துள்ளது.

இத்தகவலை குடியரசுக் கட்சியின் தலைவரான திரு. கோபர்காடே அறிவித்தார். அவர் செய்தியாளர்களிடையே பேசுகையில் தற்போதுள்ள தேர்தல் முறை வகுப்புவாதத்தையே வளர்க்கும். சட்டமன்றங்களிலும், நாடாளு மன்றங்களிலும் விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை அமுல் நடத்தப்பட வேண்டும். அப்போது தான் மக்களின் தீர்ப்பையும் அவர்களின் எண்ணங்களையும் சரியான முறையில் பிரதிபலிக்க முடியும் என்று கூறினார்.

எனவே தனதுகட்சி அக்டோபர் 17-ம் தேதி முதல், தேர்தலில் விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை கோரியும், மற்றும் விலைவாசி உயர்வு, அரிஜனங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை கண்டித்தும் போராடப் போவதாக அறிவித்தார்.

அவர் மேலும் கூறுகையில் சட்டத்தை மீறி தரிசு நிலங்களையும், உணவு தானியக் கிடங்குகளையும் தன் கட்சித் தொண்டர்கள் கைப்பற்றி தேவைப் பட்டவர்களுக்கும் விநியோகிப்பர் என்று அறிவித்தார்.



## விலைவாசி உயர்வை....

(3ம் பக்கத் தொடர்ச்சி)

தோழர் கே சி கருணாகரன் தலைமையில் தோழர்கள் வேணுகோபால், பி வி ஆறுமுகம், எம் என் காளியப்பன் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

சிங்காநல்லூர் பஞ்சாயத்து தலைவர் தோழர் கே பழனியப்பன் துவக்கி வைத்தார்.

தோழர் பி.ரங்கப்ப கவுண்டர் தலைமையில் தோழர்கள் தங்கவேலு, சிவராமன் மலையாண்டி செட்டியார் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர். தோழர் வி. சின்னச்சாமி துவக்கி வைத்தார். தோழர் கே. பழனியப்பன் முடித்து வைத்தார்.

### காளப்பட்டி

காளப்பட்டி கிராமத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளையின் சார்பில் 3நாள் உண்ணாவிரதம் நடந்தது.

அக் 1ந் தேதி காலைமுதல் 4-ந் தேதி காலைவரை முதல் குழுவினர் உண்ணாவிரதம் இருந்தனர். முதல் குழு உண்ணாவிரதம் முடிந்தவுடன் இரண்டாவது குழு தனது 3 நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டது,

தோழர் பி நடராஜன் தலைமையில் கணபதியப்பன், பி குமாரன், எம் கணேசன், கே மனோகரன், கே வேலுசாமி ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

உண்ணாவிரதத்தை நூற்றுக்கணக்கான பொது மக்களும் தொழிலாளர்களும் தாய்மார்களும் மாணவர்களும் வந்து பார்த்து ஆதரவும் வாழ்த்தும் தெரிவிக்கின்றனர், நிதி உதவி செய்கின்றனர்.

### சேலம் மாவட்டம்

#### ஆத்தூர் தாலுகாவில்

சேலம் மாவட்டம் ஆத்தூர் தாலுகா, பெத்தநாயக்கன்பாளையம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை சார்பில் அக். 5, 6, 7 தேதிகளில் 3-நாள் தொடர்ந்து உண்ணாவிரதம் 7 இடங்களில் மேற்கொள்ளப் பட்டது.

அது பற்றிய விவரம் வருமாறு:—

#### கெங்கவல்லி

கெங்கவல்லி பஸ் நிலையம் முன்பு அக். 5-ந் தேதியன்று காலையில் வட்ட வி ச செயலாளர் தோழர் எஸ். பழனிமுத்து, வி. ச. உறுப்பினர் பி.நடராஜன்ஆகியோர் 3நாள் உண்ணாவிரதம் மேற்கொண்டார்கள். உண்ணாவிரதத்தை வட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் எம். நாராயணன் துவக்கி வைத்துப் பேசினார்.

#### ஆத்தூரில்

ஆத்தூர் பஸ் நிலையம் முன்பு 5ந்தேதி காலையில் வட்ட வி. ச. செயலாளர் ஆர். பி. ராமசாமி, நகரக் கட்சி செயலாளர் பி. அருணாசலம், ஏ. மூக்கன், செல்வமுத்து ஆகியோர் உண்ணாவிரதம் மேற்கொண்டனர்.

உண்ணாவிரதத்தை மாவட்ட வி. ச. செயலாளர் தோழர் பி. தர்மலிங்கம் துவக்கிவைத்தார்.

#### நரசிங்கபுரத்தில்

நரசிங்கபுரத்தில் பஸ் நிலையம் அருகில் தோழர்கள் ஏ. கங்காதரன், எம். பசுபதி ஆகியோர்5-ந்தேதிகாலையில் 3 நாள் உண்ணாவிரதத்தைத் தொடங்கினர். இந்த உண்ணாவிரதத்தை வட்ட வி. ச. தலைவர் தோழர் ஆர்.பி.ராமசாமி தொடங்கி வைத்தார்.

#### காட்டுக்கோட்டையில்

காட்டுக்கோட்டை பஸ் நிலையம் அருகில் விவசாய சங்க கிளைச் செயலர் தோழர் கே.வி.கிருஷ்ணன், மார்க்சிஸ்ட் கட்சிக்கிளை செயலர் வி. சின்னச்சாமி, கே. கொண்டையன் 'விவசாய சங்கம்) ஆகிரோயர் 5-ந்தேதி காலையில் உண்ணாவிரதம் துவங்கினர். உண்ணாவிரதத்தை தோழர் கே. பழனிமுத்து துவக்கிவைத்தார்.

#### ஆறகழூர்

ஆறகழூர் பஸ் நிலையம் அருகில் 5-ந் தேதி காலையில் மார்க்சிஸ்ட் கட்சி கிளைச் செயலாளர் தோழர் மு. ராமசாமி, தோழர் எஸ் சண்முகம் ஆகியோர் உண்ணாவிரதம மேற்கொண்டனர். கட்சியின் வட்டக்குழு உறுப்பினர் தோழர் வி எஸ் மணி உண்ணாவிரதத்தைத் துவக்கிவைத்துப் பேசினார்.

#### செல்லியம்பாளையம்

செல்லியம்பாளையம் பஸ் நிலையம் அருகில் அப்பம சமுத்திரம் கட்சிச் செயலாளர் கே ராஜு, ஆர் கிருஷ்ணன், எம் மல்லாக் கவுண்டர் ஆகியோர் 5-ந் தேதி காலையில் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். வட்ட மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் பி. ராஜு உண்ணாவிரதத்தைத் துவக்கிவைத்தார்.

#### பெத்தநாயக்கன் பாளையம்

பெத்தநாயக்கன்பாளையம் பஸ் நிலையம் அருகில் வி. ச. தலைவர் தோழர் ஆர். ரங்கநாதன் 5ந்தேதி காலை தனது 3 நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்.

தோழர் பி. ராஜு உண்ணாவிரதத்தைத் துவக்கிவைத்தார்.

#### குடவாசலில்

விலைவாசி உயர்வு, வேலையில்லா திண்டாட்டம், வரிக் கொடுமை இவைகளை எதிர்த்து தஞ்சை மாவட்டம் குடவாசலில் உண்ணாவிரதம் நடந்தது.

அக். 4-ந்தேதி காலை 6 மணிக்கு குடவாசல் திருக்குளம் மேல் கரையில் தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் எஸ். கணேசன், ஏ. எம். முத்து, கே. தங்கராசு ஆகியோர் உண்ணாவிரதம் மேற்கொண்டார்கள். இவர்கள் 5-10-72-ந்தேதி காலைவரை உண்ணாவிரதம் இருந்தார்கள்.

5-10-72ந்தேதி காலை சித்தாடி ஆர். வரதராசன், வி. இராமையன் ஆகியோர் உண்ணாவிரதம் தொடங்கினார்கள்.

உண்ணாவிரதம் இருக்கும் தொண்டர்களை ஆண்களும் பெண்களும் வந்து பார்த்து உண்டியலில் காசும் போட்ட வண்ணமிருக்கின்றனர்.

## செங்கற்பட்டில் அரசு ஊழியர்களின் ஊர்வலம்

செங்கற்பட்டு. அக். 5—

செங்கற்பட்டு நகரில் ஆர்ப்பாட்ட ஊர்வலம்நடைபெற்றது. ஐநூறுக்கும் மேற்பட்ட அரசு ஊழியர்கள் கலந்துகொண்டனர். செங்கற்பட்டு தலைமை அஞ்சலகத்தில்திரு.தசரதராமன் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. திருவாளர்கள் அரங்கநாதன், எத்திராசன் ஜோதி, கே கே சுப்பிரமணியம், டி எஸ் வடிவேலன், சீதாராமன், ஆகியோர் பேசினர். பழிவாங்குதலை எதிர்த்து கண்டன தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.



## பஞ்சம், பட்டினிச் சாவுகள்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இதனால் எண்ணற்ற கலவி நிலையங்கள் மூடப்பட்டுள்ளன. போலீசின் வன்முறைக்கு கண்டனம் தெரிவிக்கும் பொருட்டு மாநில முழுவதும் சத்தியாக்கிரகம் நடத்துவதற்கு மாணவர் நடவடிக்கை குழு முடிவு செய்துள்ளது.

செப் 7 முதல் 10,000க்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் ஒவ்வொரு மாவட்டத்திலும் தினமும் உண்ணாவிரதம் மேற்கொண்டனர். பாட்னாவில் உள்ள தலைமைச் செயலகத்தை ஆசிரியர்கள் கெரோ செய்தனர். இதனால் அலுவலகள் ஸ்தம்பித்தன.

தனியார் பள்ளிகளை அரசு ஏற்கவேண்டுமென்ற கோரிக்கையை அரசு ஏற்கவில்லை. மேலும் பான்கிபூர் சிறையிலுள்ள ஆசிரியர்கள்மீது நடத்திய தடியடிக்கு நீதி விசாரணை நடத்தவேண்டும் என்ற கோரிக்கையையும் அரசு ஏற்றுக்கொள்ளவில்லை.

போலீஸ் மீது செங்கற்களைக்கொண்டு எறிந்தனர். ஆகவே போலீஸ் தடியடி நடத்தியது என மாநில முதலமைச்சர் ரேடியோவில் பச்சைப்பொய் பிரச்சாரம் செய்தார். இவரது ரேடியோ பேச்சிற்கு ஆதரவாக நிதி மந்திரி தோரகாராய் சட்டசபையில், "தேசிய மயமாக்குவதால் கல்வியில் வளர்ச்சி ஏற்பட்டு விடுமா? என வினவினார்.

ஆளும் காங்கிரசைச் சேர்ந்த பலரே பள்ளிகளை வியாபார லாப நோக்குடன் நடத்துவதனல் ஆளுங் கட்சி அவைகளை அரசுடைமையாக்க மறுக்கிறது.

### அரசு ஊழியர் போராட்டம்

50,000க்கும் மேற்பட்ட அரசு ஊழியர்கள் மூன்றும் சம்பளக் கமிஷனின் அறிக்கை கோரியும், குறைந்தபட்ச ஊதியம் கோரியும் போராடினர். செப் 23 வரை நூற்றுக்கும் மேற்பட்ட அரசுஊழியர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

மார்க்சிஸ்ட் கட்சியும், சோஷலிஸ்ட் கட்சியும், மாணவர்களும், ஆசிரியர்கள்—அரசு ஊழியர்களின் போராட்டத்திற்கு ஆதரவளித்து வருகின்றனர்.

காங்கிரஸ் ஆட்சியில் பீகார் மாநிலம் பட்டுவரும் இன்னல்கள்பற்றிய ஒருசில விபரங்களே இவை.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்துவடக்குச்சித்திரைவீதி மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர். கே. முத்தையா

# விலைவாசி ஏறிப்போச்சு; வேதனை பெருகிப்போச்சு